உ

வேலும் மயிலுந் துணை.

பினாங்கு

# தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி பிள்ளைத் தமிழ்.

இஃது

திருவாளர்

டாக்டர் வே. க. தம்பிப்பிள்ளை அவர்கள்

கேட்டுக்கொண்டபடி

உபாத்தியாயர்

மகா-ள-ள-ஸ்ரீ மு. அ. சிவானந்தம் அவர்களால்

இயற்றப்பெற்றது.

மெர்க்கென்டைல் பிரஸ், பினாங்கு.




# முகவுரை.

கணணிமலைத் தண்டாயுதபாணிப் பெருமான்மீது எம்மாலியற்றப் பெற்ற பாக்கள் முன்னூறு அவைகளனைத்தையும், மலாககாவாசரும், தமிழ்க்கொடி ஆசிரியரும், தமிழறம்பேணுந், தகைமையாளருமாக விளங்கும், திருவாளர் உ, அரு. அருணசலஞ் செட்டியார் அவர்களிடம் மேற்படி பாக்களை யனுப்பி அவைகளைப் பார்வையிட்டு ஓர் சிறப்புப் பாயிரம் எழுதியனுப்பும்படி வேண்டிக் கொண்டேன். திரு. செட்டியாரவர்கள், எமது பாக்களிற் பிள்ளைத்தமிழைத் தனியாக எமக்கனுப்பி, அதை முன்னே யச்சிடும்படியாகவும் அவற்றை அச்சிடும்போது, மற்றைய இருநூறு பாக்களுடன் கூடிய விரைவிற் சிறப்புப்பாயிரம் எழுதியனுப்புவதாக எழுதியதுடன், தமிழறம் பேணுந் தகைமையாளர் என்பது புலப்பட! அச்சுச் சிலவிற் தமது பங்குயிதுவெனக் குறிப்பிட்டு வெள்ளி $10/00 பத்து எமக்கனுப்பி வைத்தார்கள். நாமும் திரு. செட்டியாரவர்கள் ஊக்கத்தை மனத்துள்ளிருத்தி அச்சிடத் துணிந்தோம் நாட்டுக் கலகத்தினலும் பொருளின்மையாலும் தயங்கி நின்ற எமக்கு நல்வார்த்தை கூறி இந்நூலை அச்சிட்டு உதவிய திரு. வே. நடேசம்பிள்ளையவர்கட்கும், இந்நூலைப் பார்வையிட்டுச் சிறப்புப் பாயிரமெழுதியளித்த உபாத்தியாயர் திரு. பொன்னம்பலம் பிள்ளை, திரு க. துரையப்பா அவர்கட்கும் தமிழறம் பேணுந் தகைமையாளர் உ. அரு. அருணசலம் செட்டியாரவர்கட்கும் தகுந்த காலத்தில் நன்றிபாராட்ட கடமைப் பட்டுள்ளேன்.

இங்ஙனம், உபாத்தியாயர்

**மு. அ. சிவானந்தம்,**

# சிறப்புப்பாயிரம்

---

உபாத்தியாயர்

மகா-ா-ா-ஸ்ரீ க. துரையப்பா அவர்கள் சொல்லியது

ஆசிரியப்பா

சீர்பெறு மிலங்கைமா தேவிதன் சிரமெனப்
பேர்பெறு மரியயாழ்ப் பாண மெனும்புவிக்
கணியெனத் திகழு மளவை யம்பதியிற்
பிணியறிந் தௌஷதம் பெட்புற நல்கி
நல்குர வுற்றோர் நலிவது தீர்க்குந்
தொல்குடி வேளாண் மரபுயர் தோன்றல்
கந்தையா பிள்ளை வைத்தியன் கவினு
ரந்தமில் தவஞ்செய் தன்புட னளித்த
புத்திரன் செல்வப் பினாங்கு வாழ்பவரி
லுத்தமன் மெய்ம்மை யுரைத் திடுஞ்சுகுணன்
தலம்புகழ் டாக்டர் தம்பிப் பிள்ளை யோர்
சிலம்புறை சிவன்றன் திருநுதற்குமரன்
தண்ணீர் மாமலை தங்கிய நாயகன்
கண்ணீ ராறுடைக் கடவுளென் றுரைக்குந்
தண்டாயுத பாணி தன்மேற் தக்கவர்
கொண்டாடு பிள்ளைக் கவியது கூறென
வண்ணைவாழ் வேளாண் மரபுடை வள்ள
புண்ணியம் பலபுரி புகழுடை யொருவ
னம்பல வாண னருந்தவத் தாலிவ்
வம்புவி யளித்திடு மறிவுடை யொருவன்
முத்தமிழ் நாற்கவி முறையெலா முணர்ந்த
வுத்தம னருணாசலப் பெரியோன் பாற்
கற்றதோர் மாணவன் ககன வானவரு
மற்றமற மனத் தாலனு தினமு

மஞ்சண வண்ணற் கருதிரு மருக வென்
றஞ்சலி செய்யு மானருள் குமரன்
பதமதை விரும்பிப் பண்புற வவன்றன்
பதமலர் போற்றும் பழுதறு தவத்தோன்
பலமதக் கொள்கையும் பாங்குறக் கற்றோன்
பலமுறு சைவநூற் பற்றினையுடையோன்
காப்புச் செங்கீரை தால் கருது சப்பாணி
நாப்புகழ் முத்தம் நலந்தரு வருகை
யம்புலி சிற்றில் லழகிய சிறுதேர்
பம்பும் சிறுபறை பத்தும் பகர்ந்தனன்
செற்றமில் நண்பன் சிவானந்த னென்றுங்
கற்றவர் போற்றுங் கவிஞர் புலவனே.

உபாத்தியாயர் ச. பொன்னம்பலம் பிள்ளையவர்கள் சொல்லியவை

ஆசிரிய விருத்தம்,

தனவணிகர் போற்றுதிருத் தண்ணீர்மா
மலைவாழுந் தண்டபாணிக்
கனவரத மோதுமருந் தமிழ்நூலொன்
றியற்றுகென வகிலமேத்துங்
கனமிகு சிர் டாக்டர்தம்பிப் பிள்ளைகவி
னுறக்கேட்பக் கலைநூல் வாணர்
மனம்மகிழப் பினங்கிஸ் றீற் மருவுமொரு
மந்திரத்தில் மதியோடேகி,

எண்டிசையு மேத்துமுயர் வண்ணைநகர்வாச
னெழிற் பொழில்கள் தோறும்
வண்டிமிர்தண் ணீர்மலையில் வாழ்தண்ட
பாணிகுக வரதன்றன்மேல்
மண்டிய பேரன்பினொடு மருவுபிள்ளைத்
தமிழ்க்கவியை மகிழ்ந்திங் கீந்தான்
தண்டமிழ் நூற்புலவர் புகழ் சிவானந்தன்
றன்னுமைந் தழைக்க மாதோ.

# அவையடக்கம்.

---

ஆராய்ந் தெழுதே னெனினு மருந்தமிழின்
பேராய்ந்து கூறும் புலவீர்காள்—நேராய்ந்து
குற்றங்கள் போக்கிக் குணங்கொண்டு போற்றுதலே
கற்றவருக் காகுங் கடன்.

உ

சிவமயம்

# பிரபந்த

# தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி

# பிள்ளைத்தமிழ்

---

## காப்புப்பருவம்

### திருமால்

பன்னிரு சீர்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

பூமருவு பாற்தளம் பாயிற் றுயின்றுழி
பூசல்புரி பாணியேந்திப்
பூரண தரங்கபாற் பௌவமதில் வந்ததோர்
பொற்றொடியை மார்பிருத்தி
மாமருவு மெகினமா யரியநான் மறைகடமை
மலரயற் கோதிஞான்றும்
மாசிலா தோங்குநற் றுழாய் மௌலியாய்தூய
மாதவா ஞானமுதல்வா
நாமருவு தேவிநவை யற்றவான் சசியனைய
நங்கையர்க ளறுவரேத்த
நாட்டமீ ராறுடைய நாதனடி யேனையாள்
நாதநாதாந்த முதலாய்க்
காமருவு தண்ணீர் மலைப்பதியில் வாழ்ந்திடுங்
கந்தன்றனைக் காக்கவே
கவினேறு வுவணமே லினிதேறு கடவுள்நின்
கழலடிகள் முடிசூடுவாம்

### பரமசிவன்.

வடமலையில் வருமமல மயில்மகிழ வரியதிரு
வாமம் வழங்கியாதி
வான்முகடுடைத்தமர ரகடுகிண் டரியயன்
வாழ்பதி யழித்து வலிய
குடமலை யிடித்துவரு கும்பக்களிற்றினதள்
குறைவறுக டாம்போர்த்துமுன்
கொள்ளுமீ னசனியென மலரடிக் கழல்களொளிர்
குரவையிட வரியவெள்ளித்
திடமலை யமர்ந்து திரு மேவுநட மாடிமகிழ்
தெய்வமே யமலவடிவாய்த்
தீஞ்சுவைக் கனிகள்மலி தண்ணீர் மலைப்பதித்
தேசிகனை யினிதுகாத்தல்
படமலைத் திடுபணிப் பூண்கொண்ட பரமனே
படியிலுன் பாரமெந்தாய்
பாவியென் வினையகல வேகுகன் பாதமலர்
பாடித் துதிக்க வடியேன்.

### விநாயகர்.

கொண்டல்நேர் மதநீர் பெருக்கிவளர் கோட்டினுற்
குலவரை தகர்த்துவானிற்
குலவுமோர் தேவர்குடர் பிளவுபட விரவிமதி
குன்றவார் கலைகள்யாவும்
பண்டயன் மால்தமை யொடுக்கியுயர் பரவைநீர்
பற்றற வகட்டடக்கிப்
பழுதிலுயிர் யாவையுங் கோறல்புரி கஜமுகப்
பாவிதனை முன்னமடவே
கண்டலம் போதுகம ழிமையமலை வல்லியருள்
கரிமுகக்க டவுளேநற்

கதியெனக் கருளமுக் கனியமுது குதலைமொழி
காட்டுமெய்க் கருணைவடிவாய்
மண்டலம் மருவுதண்ணீர் மலையின் மீதுறையும்
மாட்சிமிகு குமரகுருவை
மனமகிழ்ந் தருகிருந் தினியமறை யோதிணனி
மறவாமலே புரக்க

### உமாதேவி

மஞ்சுடாடு சம்பையென மருவுநுண் ணிடையில்மணி
மேகலை பிறங்கவெழிலார்
மரகத மதாணியொடு வான்மீ னெனத்தரள
மாலையுயர் மார்பு திகழக்
கொஞ்சுபரி புரமினிய செம்பொற் சிலம்புகழல்
குரவையிட வானிலுலவு
குளிரிளம் பிறை நுதலில் வைடூரியச் சுடிகை
குலவநற் பணிகளுடனே
விஞ்சுவை ரத்திலுயர் குண்டலம் வார் செவிகள்
மீதிரவி போலுமசைய
விறல்மேவு மலையில்வரு விமலைபார் வதியன்னை
விபுதர்புகழ் தண்ணீர்மலை
நெஞ்சு மகிழ்வாக வளர்நீத கனியூறல் மொழி
நீடுதவு குமரவேளை
னேயமுட னருகமர்ந் தினியநல் லமுதூட்டி
நித்தமினி தேபுரக்க

### திருமகள்

தரங்கசக் கரமதனில் வருசலசை தண்டுழாய்
மாலையணி தாமோதரன்
தனதரிய மார்பினுந் தண்குவளை மலரினுந்
தங்கிவளர் தேவிமுன்னுட்

புரங்களொரு மூன்றையும் பொடிபட வெரித்திடும்
புங்கவன் யோகமழியப்

பொருதுமத வேளைமுன் னீய்ந்த பொன்னேயரிய
புனிதமார் ஞான முதல்வி

கரங்களீ ராறுசிர மாறுகற் றோர்கள்புகழ்
கனிமொழிக் குகலையழகாற்

கருதுகமழ் மலரணைய பாதனெனை யாளவரு
கருணைப்பிர காசமுருகன்

துரங்கமிகு தண்ணீர் மலைப்பதி துதைந்துவளர்
தோமில் குகனைக்காக்கவே

துடியிடைத் தோகையிந் திரைநினது பாதமலர்
துணையெனக் கொள்ளலினிதே.

### நாமகள்

வெள்ளிநே ரிதழுதை விரித்தினிய தேறல்தனை
வீசியறு காற்குநாளும்

விருந்தோம்பு சலசமிசை வீற்றிருந் திடுமமலை
விரிஞ்சனின் தாலுதனிலே

துள்ளினின் றோர்சுருதி சொல்லிவளர் கின்றநற்
தோகை யெல்லோர்க்குமினிய

தோமிலா ஞானவா ரிதியென விளங்கிடுஞ்
சுகிர்தப் பிரகாசவல்லி

யள்ளிவா னவர்தமக் கமிர்தமது பாலிக்கு
மரிமருகி யன்னைவாணி

யனுதினமு மடியர்புக ழாறுமுக னினியகனி
யமுதனைய குதலைமொழியோன்

புள்ளிமயில் நடனமிடு தண்ணீர் மலைப்பதிப்
புனிதகுக மணியையெனையாள்

போதமுரு கோனேயன மீதுலவு பொற்றொடிப்
பிராமியன் போடுகாக்க

## வைரவக் கடவுள்.

ஐந்தானனம் நமக் குண்டைந்து தொழிலுமென
தாஞ்ஞெவழி யேநடக்கு
மையமிலே நாமரன் பாதம் பணிந்திடுவ
தாகாதெனக் கருதிடுஞ்
சந்தார் தடம்புயப் போதனோர் சிரமதைத்
தான்தடிந் தமரரேத்தத்
சலனமறு ஞாளியூர்ந் தினியதே ஞெழுகுசெந்
தொடையணிந்துலவு குமாா
நந்தா, வனங்கள் நிறை தண்ணீர் மலேப்பதியில்
நாடொறும் வாழுமமல
நாயகன் வானமிர்த மனேயதுவர் வாய்க்குதலே
ஞான குமரேசகுருவை
வந்தா தரம்புரிந் தேகாக்க வரதஜெய
வடுகனினதடி போற்றினேன்
வைரவாகார்வாசி மீதேறி வருமரிய
வன்மைமிகு காரியாசே

## வீரபத்திரர்

முண்டக மலர்க்கணுறை வேதனருள் மக்களுள்
மிகுதவமி யற்றிமதியை
முடிமிலேச் சியபரம னருள்வரத்தால் மூன்று
லோகமுந் தமதாக்கிமுன்
கொண்டகப் பிரமமாய்க் குலவுசிறு விதிமுடி
குறைத்தமரர் வேண்டவன்பாற்
கொச்சைமுடி யீந்துபத் திரையினெடு குலாவுமுக்
கண்ணுடைக் கடவுளேசிர்

மண்டலத் தவர்கள்துதி வரதகுரு வாயமரர்
வாழ்வுதவ வந்தசோதி
மாட்சிமிகு கனியமுத மூறுதுவர் வாய்மதலை
மொழிமருவு குமரவேளை
வண்டமர் புரிந்துமலர் மீதிலிசை பாடிடும்
வளமருவு தண்ணீர்மலை
வந்தருகமர்ந்து நனிகாக்க வேண்டுந்தூய
வரையமலை தருமைந்தனே.

## ஐயனார்

வெய்யவசு முகிவிபுதர் கோன்மனைவி தன்னையே
விரும்புதன் முன்னவற்காய்
வேண்டியுயர் சசிகரம் பற்றவலி தேவல்புரி
வீரமா காளனைக்கொண்
டுய்யவழி யறியாத வவள்கரத் தொளிர்குருதி
யொழுகிநில மீதிலோட
வொளிதிகட் கட்கத்தி னற்குறைத் தும்பர்தம்
முளமகிழ்ந் தினிதுபோற்ற
துய்யதண்டாயுதந் தனையேந்தி வளருமெய்த்
தோமிலா னந்தயோகி
தூரியங் கடந்தபர மேசர்துள வோன்தந்த
சுதனைத் தொழுதனன்யான்
செய்யபழ னங்கள்மலி தண்ணீர்மலைக்குகன்
செழுங்கனித் துவர்கொளிதள்வாய்ச்
செல்வ முருகேசனைக் காக்கவேண்டுந்தூய
தேசுமிகு சாத்தவரசே

## பிரமன்

மண்டுறற வால்முகை யவிழ்க்குமுண் டகமேறி
மதுரநான்மறைகளோதி

மன்னுயி ரெலாந்தந்த மண்பொதுத் தந்தைகலை
மாமகள் விரும்புவரதா
தண்டுகர கங்கரங் கொண்டுறை சதானந்த
தத்துவா தீதமுதல்வா
தண்மதி புனைந்தபர வள்ளல்தன் விழிதனிற்
றானுதித் தோங்குமமலன்
ஞெண்டுமலி தண்ணீர் மலைப்பதியில் நேயமொடு
ஞான்றுமுறை கின்றபொருளாய்
ஞாலமுறு கனிதேன் கலந்தூறு குதலைபுகழ்
ஞானமுரு கேசமணியை
விண்டுதரு நான்முகக் கடவுளே விபுதர்தொழ
விரைந்து நீயேபுரக்க
வேண்டுமடி யேன்வினைகள் வேரற வவன்பதம்
விரும்பிநின் றேத்தவினிது.

---

## செங்கீரைப்பருவம்

ஆம்பல்முகை யவிழவறு கால்குடைந் திழிதேற
லார்வமுட னுண்டுபாட
வணிமயில்கள் நடமாடு தண்ணீர் மலைக்கணுறை
யானந்த ஞானவடிவே
காம்புறழ்த் தோழிவளர் கங்கைகம லாசனிகை
கூப்பவுயர் கனகவரையிற்
கருதமரர் மலர்பொழிய வருகுமரிதருமமல
கருணைப்பிர காசமுருகா
பூம்புனலி லாட்டிநற் பொட்டிட்டு மணிகள்புனை
பொற்சிலம் பரியமலரைப்
பொருதுகழல் பூட்டியெம் பெருமாட்டி தன்குயப்
பேரமுதை யன்பினுடனே

தேம்புகனி யூறித ளளிக்கவளர் தேசிகா
செங்கீரை யாடியருளே
தேசுமலி குமரவென் தீவினை தொலைந்திடச்
செங்கீரை யாடியருளே

எண்ணிலா துயரண்டகோ டிகளெலாம் வயிற்
றெழில்பெற விருத்தியீன்ற
வெங்கள்பெரு மாட்டிவள ரிமையவெற் பிறைமகிழ்ந்
தேத்தமக ளானவம்மை
விண்ணிலா தவனமரர் வேண்டிநனி போற்றவாழ்
விமலைதரு ஞானமுருகா
வேதமுதல்வா குமுத விதழிலமு தொழுகவெறி
மாமலர்த் தொட்டிலேறி
வெண்ணிலா வீசுமெழில் மாமணி விதானனிழல்
விளங்கிளைக ளுறுவரமுது
விரும்பி ஞெடுமூட்ட வுண்டாடு பரமானந்த
வெள்ளமே யரியசோதித்
தண்ணீர் மலைப்பதிச் சண்முகா வினியநற்
செங்கீரை யாடியருளே
தாசனென் வினையகன் றோடவரு சாமிவளர்
செங்கீரை யாடியருளே

கண்டுமுக் கனியமுத மூறுசெங் காவியிதழ்
கவின்நகை யளிக்கவரிய
கதிர்மதியை மானுமுயர் வச்சிரக் குழைகள்நனி
கன்னங்கள் மீதுதிகழப்
பண்டுபா லாழிபடு தாளமணி யின்வடம்
பதிந்தகல மீதுபுரளப்
பரிதிநிகர் பொற்சிலம் பிருபாதமலர்களிற்
பதிந்துபண் பாடவறுகால்

வண்டுநற வுண்டுமகிழ் நீபமணி வானவா
வரதகுக ஞானமுருகா
வனமயில்கள் நடனமிடு தண்ணீர் மலைக்கோயில்
வந்துவளர மலகுருவே
தொண்டுகொண் டடியர்தின மேத்துகும ராதூய
செங்கீரை யாடியருளே
தொலையாத வென்வினை தொலைத்தாளு மறுமுகா
செங்கீரை யாடியருளே.

ஆதவன் வரவறிந் தம்போரு கங்கள்முகை
யார்வமொ டவிழ்க்கவறுகா.
லளிகள்நற வுண்டுபண் பாடவா னந்தமிகு
மணிமயில்கள் நடனமாடும்
பாதவப் பந்தல்திகழ் தண்ணீர் மலைப்பதிப்
பரகுமர நினதுதூய
பாதமல ரன்றியினி வேறுதுணை யில்லையிப்
பாவியா னுலகில்வாழ
நீதவறு முகஞான நிர்மலா வடியர்புகழ்
நித்தியா னந்தமுருகா
நிலைபெற்ற சூரர்நினைந் தேத்து மரசே சோதி
நேமிதனை யேந்திவாழுஞ்
சீதவன மாலிமருகா செகத்தோர்க் கரிய
செங்கீரையாடியருளே
செப்புநற் சரவணபவா செல்வ மேவுமுயர்
செங்கீரை யாடியருளே.

வாசங் கலந்தபுனை லாட்டிவெண் ணீற்றிநெடு
வாகுமிகுதிலதமிட்டு
வைடூரியச் சுட்டி சாத்திநுதல் தன்னில்வளர்
வான்மதியை மானுமரிய

மாசங்கு முதலைந்து படைனிலவு மாணிக்க
மதாணிதிருமார்பு புரள
மருவுபவ ளத்தொளிகள் வீசுமுத் தத்தறுவர்
மகிழ்ந்தமுத மூட்டவரிய
நேசங் கனிந்த குமுதத்தினின் றூறுதேன்
நேத்திரமெலாப் நனைப்ப
நிலைபெற்ற தனவணிகர் நின்றுகை கூப்பவரு
நிர்மலானந்த குகனே
தேசங்கள் புகழெழிற் தண்ணீர் மலைக்குகா
செங்கிரையாடியருளே
திகழிமைய மதனில்வரு மமலைதரு குமரகுரு
செங்கிரையாடியருளே.

மஞ்சுபடு மீழமலை மன்னன் தவத்தினல்
மாநிலத் துயிர்கள் யாவும்
மாண்புற வளித்துமதி சூடிவா மத்திலுறை
மாரகதக்கொடிமகிழ்ந்து
விஞ்சுபுகழ் மேவுசல சத்தில்வளர் மாவு முயர்
விண்ணவர்கள் போற்றுசசியும்
விரும்பினின் றேத்தநன் மகளா யுதித்தவிறல்
விமலைதரு மரியகுமரா
நஞ்சுசெறி நாகமுமிழ் மணியிருளை நீக்கவெழில்
நாடுபுகழ்தண்ணீர்மலை
நாளுமமர் ஞானகுரு வேநம்பி னோர்க்கருள்செய்
நாதநா தாந்தவடிவே
செஞ்சுடர்ச் சோதிவடி வாய்வந்த சண்முகா
செங்கிரையாடியருளே.
செயமேவு புலவரவை சேர்ந்திலகு தெய்வமே
செங்கிரையாடியருளே.

சேலாடு கங்கைவெண் கலையாடு சசியுமுயர்
செஞ்சடா டவிபிறங்கச்
செங்கைமழு வாடமான் கன்றாட வரியசிற்
சபையாடு மமலமூர்த்தி
நூலாடு மிடையுமெழில் வில்லாடு நுதலுமரி
நூபுரப் பொற்சிலம்பும்
நுண்ணறிவி னோர்களும் நுணித்தறிந் தேயினிது
நுவலவறியாமல் நின்ற
பாலாடு மொழியனைய பார்பதி யுடன்தந்த
பாலனடி யேனையாளும்
பரிதிநிற வெழுகுமுத விதழாதி வானவர்கள்
பதமலர் துதிக்கநின்ற
வேலாடு செங்கைபெற வருவிமல வறுமுகா
செங்கீரையாடியருளே
விரிஞ்சனொடு,மால் தினம், வேண்டுகுக னேதிருச்
செங்கீரையாடியருளே.

முச்சியின் பரிமள கதம்பமல ரசையமுதிர்
மாமணிச் சுட்டியாட
மிளிர்நுதலில் மதினிலா வீசமுன் சூட்டிடும்
மேன்மைதரு பொற்பட்டமும்
கச்சியே கம்பனொரு பாகங் கலந்துவாழ்
காட்சியார் காமாட்சிநற்
கமலமல ரனையகழல் சூட்டுவை டூரியக்
கழல்களுயர் கதிர்பரப்பப்
பச்சிளங் கிள்ளைவளர் பாதவக் கோடது
பதிந்தினிது பாடவழகார்
பாவலர் பணிந்தேத்து தண்ணீர் மலைப்பதிப்
பரமகுருவான குகனே

சச்சிதா னந்தனிலை மேவிடு சடாடனு
செங்கீரையாடியருளே
சரவண பவாசுரர் தமக்கினிய சாமிநனி
செங்கீரையாடியருளே.

சிகர மெழுஞ்சிந்து மீதுலவு சுத்திதரு
செழுமணிப் டந்தலதனிற்
செய்யதே னூறுமா மலரணைத் தொட்டியிற்
சேர்ந்துகண் டுஞ்சுமமலா
நாகரக மாகநனி நாடிவந் தடிபரவு
ஞானவடிவான முருகா
நந்தமார் நளினமலர் மீதிலுறை நாதனும்
நாரணனு மினிதுபோற்று
மேகருள் விழியில்வரு மெந்தை நினதடிமலரி
லிட்ட நற்றண்டைஞெகிழ
வெழில்மருவு கனகச் சிலம்பொலி முளங்கவள
ரிறைவனே யறுமுகேசா.
சேகரப் பொழில்குலவு தண்ணீர் மலைக்குகா
செங்கீரையாடியருளே
செங்கனியி னிதழமிர்த மூறுசெவ்வேளினிய
செங்கீரையாடியருளே.

உருகியுடல் தளரவிரு கண்ணீ ருகிப்பவுறை
யுமுவலருளத்திலறிவா
யூற்றெடுத் தோடுபர மானந்த வெள்ளமா
யோங்குநற் கருணை வாழ்வே
முருகிதழ் விரிக்குமரு முண்டகன் றன்னையே
முனமருள் முகுந்தனுக்கோர்
முறையிலுயர் மருகனென வருமமல நாயகா
முக்கணற்கினிய புதல்வா

குருகிளம் பார்ப்பினொடு கூடிவளர் பொழில்மருவு
கோதில்தண் ணீர்மலையிலே

குலவுகும ரேசனே கோற்றென் கனிந்தகனி
குளிரமுத முத்தமொழுக

வருகிருந் தமலதிரி புரையமுத மூட்டநனி
செங்கிரையாடியருளே

யாறுமுகனே யரிய வமலபரி பூரண
செங்கீரையாடி யருளே.

---

## தாலப்பருவம்

ஆரணனைச் சிறை செய்ய வமர்ந்திடு
மரசே யழகார்மெய்

யைங்கர னுக்கிளை யாயறு மாமுகத்
தையா வமலாநற்

பூரண ஞானியர் போற்றிட வேயொளிர்
புனிதா விடமேகொள்

பொங்கர வப்பணி யானுளம் மோடருள்
புதல்வா விறல்மேவும்

நாரண னுக்கொரு மருகா நிதிமிகு
நாட்டின் நனிவாழும்

நாகர் புகழ்ந்திட நீப மணிந்தருள்
நாதா வெனையாட்கொள்

தாரணி போற்றுயர் சரவண மாமணி
தாலோ தாலேலோ

தண்ணீர் மாமலை வாழ்குக னேதிருத்
தாலோ தாலேலோ

மூரிக் கரிமுக னுக்கிளை யாய்மிளிர்
முண்டகன் மாலுடனே
முன்னின் றடிதொழ முழுமுத லானருள்
முருகா சரவணமா
மேரிக் கரையளு மாதர்கள் தங்குயத்
தெழிலா ரமுதுண்டு
யெங்கணு மேயினி தாய்நடமாடிடு
மெந்தாயறல்மேவும்
வாரிக் கிறைமலர்ப் பதமது தொழவரும்
வரதா புவிமீது
வண்டமிழ் வாணர்கள் போற்றிடு மறுமுக
வாழ்வே தேனூறுறுந்
தாரிற் பொலிபுய னேதமியேனை யாள்
தாலோ தாலேலோ
தண்ணீர் மாமலை தங்கிய நாயகா
தாலோ தாலேலோ.

ஐங்கர னுக்கொரு துணைவா வறுமுகத்
தையா நிலமாதி
யைந்து மமைத்துறை யமல னனித்தரு
ளத்தா வறுகால்சூழ்
கொங்கவிழ் கோதில் மலர்த்தொடை சூடிய
குமாரா தமிழோதுங்
கொற்றவன் நாவலர் கூடிநின் றேதொழுங்
குகனே யியல்பாக
வெங்கணு மேயுறை யரிமருகா வெழி
லெய்திய முருகோனே
யென்னையு மாட்கொளு மெம்பெரு மானுய
ரெந்தா யொளிர்தூய

தங்க மிகுந்தண் ணீர்மலை நாயகா
தாலோ தாலேலோ
தாமரை யாசனன் போற்றிடு சாமிமெய்த்
தாலோ தாலேலோ

கற்றவர் கைதொழு தேத்திட வேவளர்
கமல மலர்ப்பாதக்
கனகக் கழல்நனி யோலிட வார்கதி
காட்டிமெய் நடமாடி
நற்றவ ருக்கருள் ஞான வரோதய
நாதா வுயர்போதா
நதிமிசை வருமரு மமலா நாகர்கள்
நலியா வாழ்வுபெறப்
பெற்ற மமர்ந்திடு பெருமா னுமையொடு
பேதமிலா துதவும்
புனிதா வொருதன வணிகர்கள் போற்றிடு
புங்கவனே யடியார்
சுற்றமுடன்வாழ் தண்ணீர் மாமலைச்
சுகிர்தா தாலேலோ
சுந்தர மேவிய சண்முக மாமணி
தாலோ தாலேலோ,

நித்த நிராமய நிர்மல மாய்வளர்
நீதா வுயர்போதா
நீடு தபோதனர் நெஞ்சக மாயுறை
நேயா வரமேவும்
முத்தர்கள் போற்றிடு முக்கண ணருளிய
முருகா முருகாரும்
முண்டக னும்புக ழற்புத னேமறை
முதல்வா வரிதான

வுத்தமர் ஞான்று முவந்தினி தேத்திடு
மொருவா வினிதாய
வுலகினி லெழில்பெறு தண்ணீர் மலைதனி
லொளியா யுறைவோனே
சித்த முவந்தெனை யாள்குகனே திருத்
தாலோ தாலேலோ
சில மிகுந்திடு சண்முக மாமணி
தாலோ தாலேலோ

வண்டு மகிழ்ந்திசை பாடுந் தொடையணி
வரதா குமரேசா
வஞ்சகர் நெஞ்சி லுறுதொளி யாய்வளர்
வள்ளால் மறையோதும்
மண்டு புகட்பெறு மாசறு மற்புத
மணியே மயிலாடும்
மங்கள மார்மலை மங்கை தருந்திரு
மைந்தா மகிழ்வாய்நின்
தொண்டு புரிந்திடு மென்வினை தீர்த்தருள்
தூயா வெழில் மேவுந்
துடையிடை மாதர்க ளறுவர் துதித்திடுஞ்
சுகிர்தா விறல்சேருஞ்
செண்டுடை யாற்கினி யாய்செக மேலுயர்
தாலோ தாலேலோ
செல்வ மிகுந்தண் ணீர்மலை நாயகா
தாலோ தாலேலோ.

கங்கைதன் மைந்த னெனப்புவி யோர்புகழ்
கந்தா வுயர்போதக்
கற்பக வானவர் கைதொழு தேத்துமெய்க்
கருணைக் கடலேபார்

மங்கையராறுவர் மகிழ்ந்திடு மறுமுக
மணியே யினிதான
மாதவர் தம்மனமே தினம் வாழ்ந்திடும்
வாதா மலர்போலுஞ்
செங்கையி லேமழு வேந்து சிவன் தரு
செல்வக் குமரேசா
சீர்கொள் கதம்ப மலர்தொடை சூடிய
தேவா புவிமீதிற்
சங்கைகொள் தண்ணீர் மாமலை நாயகா
தாலோ தாலேலோ
சதுர்முகனுந் தொழுஞ் சரவண பவகுகா
தாலோ தாலேலோ

ஆரண மாதவர் போற்றிடு மற்புத
வரசே விறல்மேவு
மம்புயன் மால்தனக் காதியன்றேயரு
ளமலா வெழிலான
வாரண மாமுக னுக்கிளை யோனெனும்
வரதா குருநாதா
வஞ்சகர் நெஞ்சுறை யாது வளர்ந்தெழு
வள்ளா லுயர்ஞான
காரணனே யொளிர் செந்திப்பதிவளர்
கந்தாவெனை யாட்கொள்
கதம்ப மணிந்திடு மையா கலைபுகழ்
கருணா கரமணியே
தாரணி மேற்தண் ணீர்மலை வாழ்குகா
தாலோ தாலேலோ
தாரு வெனப்பொலி சண்முகனே திருத்
தாலோ தாலேலோ.

வஞ்சகர் நெஞ்சுறை யாது விளங்கிய
வரதா வெனையாளும்,
வானவனே திருவார்கரி மாமுக
வள்ளள் கிளையோனே.
நஞ்சணிகண்ட னளித்திடு மற்புத
நாதா நவைதீர
நான்மறை யோர்மகிழ் வாகவே நாடொறும்
நாடிடு பூம்பதனே
பஞ்சடி மாதரி னறுவர்க டங்குயப்
பாலுண் டமுதாடிப்
பண்ணவர் போற்றிட வாழ்குமரா வளர்
படிமே லழகாய
தஞ்சமதிற் றண்ணீர் மலைவாளிறை
தாலோ தாலேலோ
தனதனு மடிதொழ வருதிருச் சண் முகா
தாலோ தாலேலோ

குன்றுக டோறும் நடம்பயிலுங் குரு
மணியே குமரேசா
கோதறு பாவலர் போற்றிட வருகழற்
குகனே யினிதாக
வென்று மெனக்கருள் செய்திடு மற்புத
வெந்தாய் நிறைவாகு
மெவ்வெவ் வுயிர்களு மாக விளங்கிய
விறைவா நிதிமேவு
மன்று ளமர்ந்திடு மீசன் மகனென
வந்தாய் மறையோத
மாட்கி மிகும்வடி வேல்கர மேபேற
வளரும் பெருமானே

துன்றுயர் தண்ணீர் மலையுடை யாய்திருத்
தாலோ தாலேலோ

தோமறு சரவண பவகுக சண்முகா
தாலோ தாலேலோ

வேதவித் தாகி விளங்கிய வறுமுக
விமலா விறல்மேவும்

விண்ணவ ருக்கிறை யோனயன் வேண்டிடும்
விகிர்தா வறிவாலே

கோதவித் தார்தொழு தேத்திடு மோர்குக
நாதா குமரேசா

கொற்ற மிகுங்கரி மாமுக னும்புகழ்
குகனே மறையோது

போதவிப் பூதல மீதெனை யாண்டருள்
புனிதா பொழிலாலே

பொற்புறு தண்ணீர் மலையுடை யாயருட்
புலவா நறவூறுஞ்

சீதவித் தார்மலர் சூடிய செல்வமே
தாலோ தாலேலோ

செழுமணி புனைகழற் சரவண பவதிருத்
தாலோ தாலேலோ

---

## சப்பாணிப்பருவம்

கதிரொளி பரப்புநாத் தகமனைய கருவிழிகள்
கடைமடைதிறந்த தென்னக்

கருணைமழை பொழியவிரு கரதலத் தேந்திநற்
கவினுலவு மடியில்வைத்து

மதியொளி பரப்பா னனங்களின் மருமலர்க்
குமுதவிதழ் முத்தமிட்டு
மாருத பேராசை யோடுசி ராட்டுமலே
மங்கைதரு தங்கமகனே
விதியொடுயர் மால்தினம் வேண்டுருக நாயகா
வித்தகானந்த முருகா
விபுதர்புகழ் கௌசிகன் விரும்பிநின் றேத்துமெய்
விமலனேயறு முகேசா
கதியொளிற் தண்ணீர் மலேக் கந்தனே தூய
சப்பானி கொட்டியருளே
கமலமல ரனையவிரு கழல்களா லினியதொரு
சப்பாணி கொட்டியருளே.

தண்டையொடு கிங்கிணிக் கழல்சிலம் பிடவரிய
தமனியத்தொளிர் கொளரைஞாண்
தகதகென நுதலிலிடு நித்திலச் சுட்டிதிகழ்
தண்மதியை யெள்ளியசையப்
பண்டைநாள் மேணபுரி நற்றவத் தால்வந்த
பச்சிளங் கிள்ளேபாகம்
பதியவுறை யமலபர னுதவுமுருகா தேவர்
பதியவர்க் கியவந்தோர்
கெண்டைமீ னேறுதண்ணீர் மலேயில் வாழ்குகா
கிளர்குமுத விதழிலென் றுங்
கெழுமுமமு தொழுகநட மாடுகுரு வேகரி
முகற்கிளேய ஞானமணியே
செண்டையொரு கரமேந்து செல்வனுக் கிளேயவா
சப்பாணி கொட்டியருளே
செகமெலாம் புகழவரு முருகசர வணபவா
சப்பாணி கொட்டியருளே.

வெண்ணிலா வீசுமணி மாடத்தணிச்ச மலர்
மிகவிரித் தார்வமுடனே
விரையூறு குமுதமல ரனையகழல் மீதுவிறல்
மென்சிலம் போலமிடவே
யெண்ணிலா நித்திலத் தெழில்மருவு கண்டிகைக
ளேர்கொள் மருமத்தணிந்து
யெதிரிலா வச்சிரக் குண்டல மிருஞ் செவிகள்,
தோறுமிருளைத் துரக்கும்
விண்ணிலா தவனென விளக்கமுற வேவாகு
வலயஞ் சுமந்துபுவிமேல்
விளையாட வருமமல குமாரகுரு வேயரிய
விபுதர்புகழ் ஞானமணியே
தண்ணிலா வுமிழ் தூய தண்ணீர் மலைக்குகா
சப்பாணி கொட்டியருளே
தாசர்கள் தினம்போற்று மாறுமுகனே யினிய
சப்பாணி கொட்டியருளே.

மங்குல்கண் டாடுமெழில் மஞ்ஞைதனை வாவென்று
வாய்விட்டழைத் துமவிழா
மாதவியின் முகைமருவு மஞ்சரி பறித்துமுயர்
மணலில் விளையாட்டயர்ந்தும்
பொங்குமத வாரணக் கன்றுபின் னேடியும்
புல்வாயிளங் கன்றுடன்
பூட்கைதரு போதகந்தன்னைப் பிடித்தயற்
புதல்வர் கடமக்களித்துங்
கங்குல்பக லோயாத வாடல்கைக் கொண்டுவளர்
கருணைப்பிரகாசமுருகா
கமலைபுக ழிமையமலை தருமயற் கண்ணியருள்
கந்தனே யெந்தை குமரா

சங்குதவழ் தண்ணீர்மலைப்பதிச் சண்முகா
சப்பாணி கொட்டியருளே
சதுர்முகன் தேவர்புகழ் சாமிமகிழ் வாகநற்
சப்பாணி கொட்டியருளே.

அரியநான் மறைகளிலு வமரர்கோன் றனதரிய
வம்பொனின் முடிமீதிலு
மயன்முடியிலுந் தூயவரி மார்பினுந் தோமி
லாதிதிரு மடிமீதினும்
பிரியமா ரன்பர்க ளகத்திலும் புகழ்மருவு
புலவர்தம் நுண்ணறிவிலும்
பெட்புற வமர்ந்திடும் புனிதமுரு காவரிய
போதவடிவான குமரா
வெரியனைய விடவரிக ளுமிழ்மணிக ளெழில்விளக்
கேந்தியிரு ளோட்டஞான்று
மெங்கணுந் திகழ்தூய தனவணிக ரேத்தவள
ரெந்தையறு முகநாயகா
சொரியலர்ப் பொழில்மருவு தண்ணீர்மலைக் குகா
சப்பாணி கொட்டியருளே
சுந்தர மிகுந்த நற்பாதமலர் சூட்டியொரு
சப்பாணி கொட்டியருளே.

சந்திரன் கலைதவழு மணிமாட கூடமுஞ்
சரோருகச் சுனையுமரிய
சதுரானன் பதியு முயராழி சங்கேந்து
சலசலோ சனனிலுலகு
மிந்திரன் றனதிடமு மிருநிதிக் கிறையுறையு
மெழில்மருவு மழகைநகரு
மிரவிமுத லானகோள் மண்டலமு மினிதாடு
மிறைவவறு முகநாயகா

மந்திரத் தோங்குநான் மறைமுதல்வ னனபர
மேசாருள் தூயமகனே
மண்டலத் தவர்கள்புகழ் தண்ணீர் மலைக்குகா
மதுரமுக் கனியையனைய
சுந்தரத் துவரிதழ்ச் சரவண பவாகழற்
சப்பாணி கொட்டியருளே
சுடர்வீசு பொற்சிலம் பணிதூயனே சுகிர்த
சப்பாணி கொட்டியருளே.

அன்பர்க ளகத்தடத் தூறிடலை வீசியெழு
மானந்த வாரியேமெய்
யருள்பழுத் தொழுகுமமு தேயகில மோடுயி
ரமைத்தவற் காதியாய
வின்பநிலையே யிமைய வல்லியொரு பாகமம
ரீசனருள் ஞானமணியே
யிசைமேவு தண்ணீர் மலைப்பதியி லேவளரும்
மெந்தை குமரேசகுருவே
யுன்பத மெனக்கருள வேண்டு முடை யாய்தூய
வுலகளந் தோற்குமருகா
வுயர்கமல மலரனைய திருவடி சிவந்ததினி
யுளமகிழ்ந் தரியதேவர்
துன்பகல வருசண்முகா தோமிலாதநற்
சப்பாணி கொட்டியருளே
துரியங் கடந்திலகு சோதிமுருகா வெழிற்
சப்பாணி கொட்டியருளே.

போரிட்ட பேர்கள் புறமிட்டோட வேசமர்
புரிந்த பஞ்சாயுதற்குப்
புகழ்பெற்ற மருகனென வருமமல நாயகா
புனுகினுயர் பொட்டுமிட்டு

வாரிட்ட நித்திலச் சுட்டிபொற் பட்டமெழில்
வளர்நுதலி லினிதுசாத்தி
வான்மருவு கற்பகம் போலவள முதவுமிரு
வண்சிலம் போலமிடநற்
தாரிட்ட தண்கடம் பாவினிய வாடல்புரி
தத்துவானந்த முதல்வா
தனதனென வெனமயில்கள் நடமாடு தண்ணீர்
மலைப்பதி யமர்ந்தகுமரா
சீரிட்ட வடியர்பணி செய்யவரு சாமிநற்
சப்பாணி கொட்டியருளே
செகமெலாம் போற்றவரு தேசிகா யினிதரிய
சப்பாணி கொட்டியருளே.

பாடுமறு கால்ஞிமிறு நாளும் பதிந்துவளர்
பசியவெண் டாமரைதனிற்
பட்சமொ டமர்ந்தபா ரதிகமலை வாணெழுகு
பகீரதிமகிழ்ந்து போற்ற
நாடுமம ரர்க்கருள நாகமிசை வருமமல
நங்கைனவை யற்றதூய
நம்பனொடு தருகரி முகற்கிளைய நாயகா
நற்றவர்க்கினிய குமரா
காடுமலி யுங்கதம்பா கருணையாழி நிகர்
கந்தனே கலைகள்வாழ்த்தக்
கருதரிய குறுமுனிக் கரியகுரு வாய்வந்த
கடவுளே தண்ணீர்மலை
தேடுமணியனையமெய்ச் சண்முகா தேசுமிகு
சப்பாணி கொட்டியருளே
திகழுநான் மறைகள் தினமேத்து குகனே திருச்
சப்பாணி கொட்டியருளே.

வண்டுவளர் பண்பாடு மாமலர்ச் சோலையும்
வனசமலர் மருவுமரிய

வாவியும் மயிலாடு துறைகளும் வானவர்கள்
வாழ்தருவின் னிழல்தனிலுஞ்

ஞெண்டுவளர் கங்கைதன் ஞாங்கருஞ் ஞாயிறென
ஞான்றுமினி தாயமர்ந்து

ஞெகிழச் சிலம்புபுனை ஞானவடிவாகியோர்
ஞாலம் விளங்குமரசே

விண்டுவளர் குமுதமலர் மீதினி லமர்ந்தவிறல்
வேதனும் போற்றவரிய

வேதமுடி வாய்நின்ற விமலபர மேசர்விழி
மீதில் வருமரிய குருவே

கண்டுவளர் மொழியனைய கருணையங் கடவுளே
சப்பாணி கொட்டியருளே

கந்தசர வணபவா கடிகமழ் மலர்ப்பாத
சப்பாணி கொட்டியருளே.

---

## முத்தப்பருவம்

பொருப்பிற் பிறந்த விளந் தென்றல்
போதக்குறுமா முனியருளும்

புனிதத் தமிழைப் புகழ்ந் தெடுத்துப்
போதின்நறவைக் கனிரசத்தைக்

கரும்பின் சாற்றைக் கலந் துலகிற்
கலையார் புலவரா னோர்க்குக்

கதியார் வேலைக் குரவை தருங்
கவின்மேவிய சீரமுதமென

விருப்புற் றளிக்க விளங்கிடு மெய்
விறல்சேர் தண்ணீர்மலைக்கரசே
வினையேன் றனக்காத் தாளவந்த
விளக்கே யாறுமுகப்பொருளே
மருப்பார் கரிமா முகற் கிளைய
மணியேமுத்தந் தந்தருளே
மடவா ரறுவர்க் கீந்ததுவர்
வாயால்முத்தந் தந்தருளே.

தங்குந் தமிழ்ப் பூந்திரு நாடு
தழைக்கச் சசிதன் குலக்கோமான்
றனக் கோர் மகவாய் வந்ததடா
தகைதன் குமரா தகுவானத்
தெங்குந் திகழு மிரவி யிளங்
கதிரைத் துடைத்திங் கிரும்புவியி
லெதிர்வே றில்லா வேற் படைதாங்
கிடவே வந்தவிறைவாவோ
மங்குல் தவழும் மலர்ப் பொழிற்கண்
மயில்நின் றுடவான் மருவும்
மதிதோய் தண்ணீர் மலைப்பதி மேல்
மருவுங்குமரா வெனையாளப்
பொங்குஞ் சுருதிப் பொரு ளுணர்ந்த
போதா முத்தந்தந்தருளே
புகழ்பூங் கனிதேன் சுமழு மிதழ்ப்
புனிதா முத்தந்தந்தருளே.

பொதியம் பிறங்கப் பிறந்த தமிழ்ப்
புலவாவானிற் புலவர்கனி
பொய்யா வாழ்விற் பொலிய வருள்
செய்யும்பெருமா னேமலர்மேல்

விதியன் பால்நின் றேத்த வரும்
விமலாவேத முதற்பொருளே
வேண்டார்தமையே வேண்டாத
விபுதாயெனையா ளொருகுமரா
கதியன் பருக்கே காட்டு முயர்
கருணைக்கடலே காட்சிமிகு
கந்தா கனகச் சிலம் பலம்புங்
கவினாரிய மலர்ப்பாதா
துதிசேர் தண்ணீர்மலைப் பதிவாழ்
தூயாமுத்தந் தந்தருளே
துகடீ ராறுமுகத் தோன்றற்
சுகிர்தா முத்தந்தந்தருளே.

மாலைக் காலத் துதிக்கு மதி
தனைநேர் வதனமங் கையர்தம்
மணமார் களபக் குரும்பை முலை
மலிதீம் பாலுண் டொளிர் குமரா
சோலைக் குயில்கள் சுதி கூட்டத்
துதிசேரளிகள் பாடவென்றுஞ்
சுகமார் மயில்கள் நட மாடித்
துதையுந் தண்ணீர் மலைக்குகனே
காலைக் கடவுள் கீழ்த் திசையிற்
கதிரேபரப்பி வந்தனன்மெய்க்
கவினார் பவளத் தொளி மேவிக்
கனிதேன்கலந்த நின்வாயால்
வேலைக் கரத்திற் றரிக்க வந்த
விபுதா முத்தந்தந்தருளே
விளையாட் டயரா முன்ன மையா
விரைந்தோர் முத்தந்தந்தருளே.

அம்மையிடு மோராக் கெனவே
யகமேயுரு குமடியவர்த
மறிவாங் தடத்தி லூற் றெடுத்தே
ரன்பார் திரைகடலைவீசிப்
பொங்கிப் பெருகுமானந்தப்
புதுநீர்க்கடலே போதவருட்
புகழே யடியேன் பிழைக்கவந்த
புனிதாவாறு முகத்தரசே
கொங்கிற் றிகழ்பூங் கடம்பணியுங்
குகனேயீசற் கொருமகனே
குளிர்சந் தொடுகுங் குமகதம்பங்
குரவுங் கமழுந் திருமார்பா
சங்கிற் றிகழ்சுன் னேர்தண்ணீர்
மலையாய் முத்தந்தந் தருளே
சதுரார் தவள மொளிர் பவளத்
தனிவாய் முத்தந்தந்தருளே.

பொன்னஞ் சிலம்பு சிலம்ப நடம்
புரிபூம்பதனே புவிபோற்றும்
போதா வேத முதற் பொருளாய்ப்
பிறங்கும் புனிதப் பெருமானே
தென்னன் மகட்கோர் திருமகனே
தேவா தேவர் சிகாமணியே
திகழ்பூம் பொழிற் தண்ணீர் மலைவாழ்
செல்வா திருநேரறுமாதர்
முன்னந் தருந் தீம்பாலுகந்த
முருகா முருகுதவழ்ந்தொளிரும்
முத்தே முத்தர் தினந் துதிக்கும்
முதல்வா வடியேனகங்களிக்க

வன்னத் தமலன் போற்று முய
ரத்தா முத்தமளித்தருளே
யழகார் கனிதே னாதரத்
தரசே முத்தமளித்தருளே.

வருக்கைச் சிவையின் கனியை வலி
முகந்தன் பிணவுக்களிக்கவுயர்
வளமார் கொக்கின் பொழிலமர்ந்து
வருந்தா தரியகுயில்கூவச்
செருக்கா ளிகள் தினம்பாடுந்
தேசார் பிணங்கிற் றிகழுமெழிற்
செல்வத் தொளிருந் தனவணிகர்
தினமுந்தொழுத் தண்ணீர்மலைமே
லிருக்குங் குமரா வேழையடி
யேற்குன்கிருபை புரியாயோ
யினிதார் பவளத் தொளிர் தூய
விறைவா வாறுமுகத்தரசே
மருக்கொள் கடம்பா முகுந்தனுக்கோர்
மருகா முத்தந்தருகவே
மறைநான் கேத்தும் முருகா மெய்
வரதா முத்தந்தருகவே,

பொன்னஞ் சிலம்பு சிலம்ப மலர்ப்
பதத்திற் புதிதார்வைரமணிப்
புகழா லொளிர் குண்டலங்கள் செவி
மீதிற்பிறங்கப் புரிநூல்போற்
றுன்னத் தாளத்தார் மார்பிற்
றுகடீரரைக் கிங்கிணி புலம்பத்

துதிசேர்ந் திடுமாணிக்க மரித்
தொடிபைங் கரத்திற் றுதையவென்றுஞ்

செந்நெற் கழனி தினஞ் சூழுந்
தேசார் தண்ணீர்மலைப் பதிவாழ்

செல்வா வுயர்சீர்த் தனவணிகர்
தினமும் போற்றும் பெருமானே

கன்னல் மலர்த்தேன் கலந்தகனி
வாயா முத்தந்தந்தருளே

கமலத் தயன்மால் போற்றுமருங்
கந்தா முத்தந்தந்தருளே,

குருகுக் குழாங்கள் நனி கூடக்
குயில்முன்கூவிச் சுதிமீட்ட

கூடியளி நின்றிசை பாடக்
குலமாமயில்கள் நடனமிட

வருகே யமர்ந்து கவிதாளம்
போடுமருந் தண் ணீர்மலைவா

மூத்தா முத்திக் கொகு முதல்வா
வாறுமுகத்தெம் பெருமானே

பெருகுங் கருணைப் பெருங் கடலாய்ப்
பிறங்கும் பரமன் திருமகனே

பொன்னே பொன்னஞ் சிலம்பலம்பும்
புகழ்பூம்பாதா புவிநாதா

முருகுதவழ் பூங்கடம் பணியும்
முருகா முத்தமளித்தருளே

முகுந்தன் றனக்கோர் திருமருகா
முதுதா முத்தமளித்தருளே

வாடுங் கொடியின் மழை பொழிய
வருஞ்சிமுத மெனத் தேவர்

வருந்தா துலகிற் காக்கவந்த
வரதா வாறுமுகத்தரசே

கோடுங் கலையுங் கருநந்துங்
கூடியொருங்கே வாழவளர்

கொக்கிற் குயில்கள் கூவ நிதங்
குளிர்தண் ணீர்மாமலைவாசா

நாடுங் கமலத் தயன் மாலும்
நனினின் றேத்துமரன்பாலா

நறவார் நீபத்தொடை யணியும்
நாதா நீதச்சேதாம்ப

லேடுங் கடலா ரிரும் பவளத்
தெழில்வாய் முத்தந்தருளே

யெதிர் வேறில்லா முருகாவின்
றினிதோர் முத்தந்தருளே.

---

## வருகைப்பருவம்

வண்டுபடு தாளநகை மாதரிரு மூவர்தம்
வளைக்கரந் தாங்கவவரின்

வார்குயத் தமுதுண்டு வாமம் விளங்குமது
மாமலர்த் தொட்டிலேறிக்

கண்டுபடு கிழவிநனி காட்டிநட மாடிவளர்
கருணைப்பிர காசமுருகா

கனகமலை வருமமல வடிவாய கௌரிதரு
கந்தகும ரேசகுருவே

ஞண்டுபடு மாரிட தண் ணீர்மலையில் நாளுமுறை
ஞானவடி வானவரசே

ஞாலத்தி லேழையெற் கேஞாதி யாய்நின்ற
நாதநீ யென்னையாளப்
பண்டுபழு நற்றவர்க் கேயினிய பானுனோர்
பரமனருள் பாலவருக
பகருமுத் தமிழறிஞர் பார்தனிற் போற்றுபொற்
பாதனே வருகவருக.

கொங்குலவு குவளைமலர் மீதுகுடி கொண்டுவளர்
கோதைபகலாது வாழக்
குறைவிலா நிதிமருவு மணிமாட கூடநிரை
கொழுவுநற் றுவசநிரைகள்
மங்குல்சூழ் நாகர்பதி தனையெள்ளு மாறென
மதிக்கனி யாடஞான்றும்
மகராலயஞ் சுற்று மோர்பினுங் கதனிலுயர்
வளவருவு தண்ணீர்மலே
தங்குமா ரணமுதல்வ ளுகித் தழைத்திலகு
சாமியறுமுக நாயகா
தண்டையொடு கிங்கிணி முழங்கு பொற்பாதனே.
சரவணபவா னந்தனே
யெங்குமா கியவீச னருள்மைந்த னேயேழை
யெனதுமிடி யகலவருக
வெழில்மருவு மமலவடி வாயோங்கு மெந்தைகும
ராவினிது வருகவருக.

கற்பகத் தருள்மேவு கமலமென் பாதமேற்
கழலொலி சிலம்பஞாண்றுங்
ககனவா னவர்கள்கடி மலர்கொண்டு தொழுதிடக்
காட்சிமிகு விடையிலேறும்
நற்பகவ னுங்குநான் மறைமுதற் பொருளோது
நாயகா நவையில்தூய

நான்மறைக் கடவுளடி போற்றவரு மமலனே
நாதநாதாந்த முடிவே
சிற்பரை தனக்கிளைய மைந்தனே தேசுமிகு
தீதிலா முருகவேளே
செல்வமலி தண்ணீர் மலையிற்றுதைந் திலகு
தெய்வவறு முகநாயகா
வற்பர்கட் கறிவுறு தொளிரமல வடிவாய
வாதியேயினிது வருக
வானந்த மேவுகுக நாயகா வடியனென்
மிடி தீர வருகவருக.

செஞ்சிலம் போலிடச் சஞ்சாளி கக்குரற்
கிங்கிணிகள் சேர்ந்தொலிப்பச்
சீமூத மரியநற் தாருவென வேகருணை
செய்மலர்ப் பாதமதனு
லஞ்சிலம் புகள்தோறு மாடுமமலா வாதி
யைங்கரற்கினிய துணைவா
வற்புத சடானனு வருமறை தினம் போற்று
மானந்த ஞானமுருகா
நெஞ்சி லம்போருகன் நித்தமுந் தொழுதிடும்
நீதகுமரேச குருவே
நேயமொடு தண்ணீர் மலைநின் றிடுந்நாய
நித்தனே யாதியாய
வஞ்சிலம் பேந்துசடை யான்தந்த வையனே
யடியனென் முன்புவருக
வண்டருக் கரசருள வளரமல வடிவாய
வாதியே வருகவருக.

விண்ணிலரி வரவுகண் டுயர்வாரி சம்முகை
விரிக்கவறு கால்குடைந்து

வீசுமகரந்தமுண் டிசைபாடு பொய்கைவளர்
வைகைவளர் நாட்டிலந்நா
ளெண்ணிலரி யாசனத் தேறியர சாண்டிபுக
ழெங்கட்கிருத் தியழகா
லெதிரிலா வேதமுடி வாகித் துதைந்துறையு
மெந்தையறு முகநாயகா
மண்ணிலரி வடிவான மாதவன் றனதரிய
மருகனே முருகவேளே
மாட்சிமிகு தனவணிகர் போற்றுதண் ணீர்மலையில்
மருவுபர குருநாதனே
புண்ணியா வேழையென் வினையகல வேயருள்
புரிந்தாள வினிதுவருகப்
போதகவி வாணர்புக ழமலவடி வாயமெய்ப்
புங்கவா வருகவருக.

பிண்டிபா திரிகேதை குருந்தொடு பலாசுகவிர்
பூதவங்கோலிசம்பு
பெட்புமிகு பழுமரஞ் சுள்ளிபுக ழார்மலர்ப்
பொழில்கள் புடைசூழவரிய
கண்டினைப் பொருதுகுயில் கூவச் சுரும்புசிர்க்
கலையுணர்ந் தினிதுபாடக்
கலாபம் விரித்துமயி லாடு தண்ணீர்மலைக்
கந்தனே நினதுபாத
மண்டினோர்க் குதவுமருள் வடிவான வறுமுகா
வடிமை நானுனையழைத்தா
லன்புகூர்ந் தினிதுவந் தொருமொழி யெனக்குநனி
யருளா திருப்பதழகோ
வெண்டிசையி னோர்கள்தின மேத்துபொற் பாதனே
யேழையென் முன்புவருக

யிமயமலை வருமமலை தருமருட் குமரவென்
னிறைவநீ வருகவருக.

தேனொழுகு கமலமல ரனையசி றடிகளிற்
செம்பஞ்சி னங்குழம்பு
திகழுகனி பொற்சிலம் போலிடத் தீதிலா
தொளிர்மணி சிலம்பவானின்
மீனொழுகு மாறுநவ மணியழுத் திடுமௌலி
யாறுசிரமீதிலோங்க
மிளிரரிச் சுடிகைமணி யாரமுயர் தாளமதில்
மேன்மைதரு வாகுவலயம்
வானொழுகு மமுதனைய வுபவீத மோட்ரிய
மணிவடம் மார்புபுரள
வச்சிரக் குழைகளீ ராறுதய ஞாயிறென
வார்செவிகள் மீதிலசையக்
கானொழுகு மோர்திருத் தண்ணீர் மலைக்கந்த
சாமியின் றினிதுவருகக்
கடையனென் பவமறுத் தாளவடி வேல்கொண்ட
கடவுளே வருகவருக.

கொண்டல்படு தாளமொளி வீசவான் குலவுசசி
குளிர்நில வுதித்ததென்று
கோதில்பழ னத்தில்வளர் குமுதமுகை யவிழவறு
கால்ஞிமுறு கண்டுமகிழ்பாய்
வண்டல்மிகு கேதையலர் தனைவெறுத் தினியதேன்
வாய்முகந் துண்டுதூய
வரிபாட மயில்கள்நட மாடுபொழில் சூழ்தண்ணி
மலைதனி லமர்ந்தகுகனே
பண்டலந் தனில்வரும் பாவைமண வாளனும்
பதுமத்தமர்ந்த கோவும்

பரவுபர மேசராருள் குமரனென வேவந்த
பன்னிரு புயக்கடவுளே
தெண்டனிட் டரியதன வணிகர் தினமேத்திடுஞ்
செல்வமே யினிதுவருகத்
தீவினையி னேன்மிடிகள் தீரவிவ் வேளையென்
தெய்வமே வருகவருக.

கதிமேவு சசியிளங் கதிர்கண்டு காவிமுகை
கதவைத் திறக்க வறுகாற்
கரும்புள் தனக்குணக் காட்டிச் சிலீமுகங்
கருதுமிசை பாடஞான் றுங்
துதிமேவு தண்ணீர் மலைப்பதி துதைந்திலகு
தூயகும ரேச குருவே
துரியவடி வாயநற் றிரிபுராந் தகனருள்செய்
சுகிர்தப் பிரகாசவரசே
விதிமேவு வமலவடி வாய்நின்ற வேதனொடு
விண்ணவர் மகிழ்ந்து போற்றும்
வித்தகா ஞானபரி பூரணானந்த வொளிர்
வேலவா வென்னையாட்கொள்
நிதிமேவு பெருவணிகர் நித்தமுந் தொழுதேத்து
நீதமுருகேச வருக
நீடுபுகழ் தேடுமயில் மீதில்நட மாடவளர்
நித்தனே வருக வருக.

மகரா லயத்தில்வரு தருவா ரணங்கற்கி
மாசறக்கொண்டபோகி
மனமருண் டுயர்மலர்க் கொக்கேறு பரபுட்ட
மாயெழிலி மருவுபொழிலிற்
பகரால மனையகுர்க் கஞ்சிநின் னடிபரவி
வாழ்பவர்க் கேயிரங்கிப்

பரிதிநிகர் வேலேந்தி யமராட வந்தவுமை
பாலகாவேள்விவந்த
தகரா லருந்தவர்க் குண்டாய துன்பமது
தானகல வோர்பரியெனத்
தனியேறு மையனை நின்னடியர் தமதரிய
வினைதடிந்தாளுமரசே
நகரா லயத்தில்நனி தண்ணீர் மலைப்பதிகொள்
நறுமலர்ப் பாதவருக
நாட்டமீ ராறுடைய வறுமுகா தூயகுக
நாயகா வருகவருக.

---

## அம்புலிப்பருவம்

பரவிந்த னத்திலெரி போற்கா முகற்குளம்
பதறவெங் கலையைவீசிப்
பகருடு வினத்தினுக் கரசனென வலைகெழுமு
பாற்கட லுதித்தவுன்னை
யுரவிந்த மெனயிலகு தண்ணீர் மலைப்பதி
யுகந்தினிதமர்ந்த குமர
னும்பர்புகழ் தன்தாதை சிரமதி லுறைந்ததோ
ருண்மையையறிந் தோவரந்
தரவிந்த வேளையி லழைத்ததோ வுன்மரவு
தானுந் தழைப்பதற்கோ
தண்டமிழ் வளர்த்தகுல முதல்வனென வேதாணி
சாற்றுமொரு வாய்மைகேட்டோ
வரவிந்த பாதவறு முகனுனை யழைத்ததா
லம்புலீ யாடவாவே
யண்டங்கள் போற்றுமெழி லாதிமுரு கேசனு—
னம்புலீ யாடவாவே

விண்ணிலா தவனங்கி வெம்மைநீங் கிடவரிய
வெண்கதிர் விரித்துஞான்றும்
விபுதருக் கோராழி யமுதீந்து விண்டுமலர்
வேதனும் போற்றநின்ற
வெண்ணிலா விறைவனுயர் சடைவீற் றிருக்குமுன்
னெழிலதை யறிந்தோதின
மெங்கனும் புகழ்மருவு தண்ணீர்மலைக் கணுகுறை
யெந்தைகும ரேசனுனையே
மண்ணிலா டற்கினி தழைத்தலால் மாட்சிமிகு
மதியமிவ் வேளைதனிலே
மலையில்வரு மயிலேதிரி புரைமைந்த னெனவுனது
மனமதில்நினைந்து மகிழ்வாய்த்
தண்ணிலா தனைவிரித் தரியசண் முகமணியோ
டம்புலீ யாடவாவே
தருவனைய கருணையொளிர் திருமுருக வேளினே
டம்புலீ யாடவாவே

இருந்தவந் தனையாற்று மத்திரியி னம்பகத்
தெழில்பெறவு தித்துமரிய
விப்புவியி னோர்கள்புக ழுங்கியா னனமீது
மிணையில்பா லாழியதனிற்
பொருந்து சீரமுதமுடன் நீபிறந் தாயெனப்
புலவர்புகல் வாய்மைகேட்டோ
புனிதவெண் ணிலவுபொழி யுன்னுடற் பொலிவினைப்
புந்தியி லிருத்தியோமெய்
மருந்தனைய வானவர்கள் போற்று தண்ணீர்மலையில்
மருவு குமரேசனின்று
மனமகிழ்ந் தினிதழைத் தனனமல னதையுணர்
மனமதி லிருத்தியின்றே

யருந்தவர்கள் தொழுமாறு முகனகம்மகிழவுய
ரம்புலீ யாடவாவே
யானந்த ஞானமரு ளாதிகும ரேசனுட
னம்புலீயாடவாவே.

கரியதள்ப் போர்த்துவரு கடல்விடந் தனையுண்டு
கட்செவிப்பணியணிந்து
கையில்வெந் திசூல மேந்திநட மாடிடுங்
கடவுள்தரு குமானுக்கு
பிரியமா யோடிவிளை யாடவொரு பிள்ளையிப்
பூமியில்லாத குறையாற்
பொங்குவெண் கலைமருவு புனிதனென வேகுகன்
பெட்புற வழைத்தானுனை
யெரியனைய வேற்படையை யேந்தவரு மாதியா
யெங்கு முறைகின்ற வரசா
யெழில்மருவு புலவர்புகழ் தண்ணீர்மலைப்பதியி
லெந்தைதனையேத்தியன்பா
லரியயற் கானந்த மருளுமுயர் முருகனோ
டம்பு லீயாடவாவே
யமரர் தொழு மரியதிரு வறுமுகக்கடவுளுட
னம்புலீயாடவாவே.

பனிப்பகைவ னுக்கரிய துணைவனென நீபிறந்
தப்பனிக் குயர்தோழமை
படியினிற் கொண்டுகுரு பத்தினியை மருவியொரு
பாலனையளித்தாயவன்
தனிப்பெரும் புலவனென வறிஞர்பலர் சாற்றிடுந்
தன்மைதனை முனமறிந்தோ
தள்ளாத பருவம்நீ யென்பதை யுணர்ந்துகோ
தற்பரா னந்தவடிவாய்க்

கனிப்பொழில்கள் சூழ்ந்திடுந் தண்ணீர் மலைக்குகன்
காட்சியா ருன்னையுலகிற்
கண்டுமகிழ் வோடினி தழைத்ததா லேயினிக்
காலதா மதமின்றியே
யணிச்சமல ரனையபத வறுமுகக் கடவுளுட
னம்புலியாடவாவே
யானந்த ஞானகுரு வானகும ரேசனோ
டம்புலியாடவாவே.

குடத்துநீர் தன்னிலுங் கோதில்பல மட்சங்கள்
கூடிவாழ் பொய்கைதனிலும்
குழிநீரிலுங் குற்றமார் சலத் திடையிலுங்
குரைகடலி டத்துமரிய
தடத்துநீர் மீதிலுந் தங்கிவாழ் கின்றனின்
தன்மையை யறிந்ததாலே
தாதவிழ் மலர்க்கொன்றை தனையணிந் திடுபரன்
தந்தகுமரேசனுந்த
னிடத்து மெய்யன்புநனி பூண்டழைத்தா னுலகி
லிசைமேவு மறிஞரேத்து
மினியநற் பொழில்மருவு தண்ணீர் மலைக்குமெய்
யிறை யெனவமர்ந்தவமல
னடத்தைவிட் டாறுமுக வாதியுடனே தூய
வம்புலி யாடவாவே
யானந்த ஞானவடிவான குகமாமணியோ
டம்புலி யாடவாவே.

இன்றுபோ லென்றுமில்லா யெழில்கொள் மாடமு
மினியமலர் மிகுபொழில்களு
மிந்திரன் முதலாய தேவர்தம் பதிகளினு
மிடைவிடா தேனோடுறுய்

யொன்று சொல்வேன் கேட்டிமதியமே யோதுநான்
மறைமுதற் பொருளதாகி
யுலகெலாந் தானுயுறைந் துயிர்க் குயிராகி
யொன்றுபல வாகிநிலமேல்
நன்றுநின் றன்பர்நனி போற்றவருள் செய்திடும்
நாதநா தாந்த முதலாம்
நாயகன் பாதமலர் போற்றில் நின்கலையெலாம்
நாடொறும் வளருமன்பா
லன்றுமலை வல்லிதரு மாறுமுக னேடுவின்
ணம்புலீ யாடவாவே
யானந்த மேவுதண் ணீர்மலையி லமலனுட
னம்புலீ யாடவாவே.

கடற்பிறந் தாயமரர் கசக்கிப் பிழிந்துமிர்த
மாகயினி துண்டுமகிழக்
கட்செவி கடுக்கொளெயி ருற்கடித் துன்னுயிர்
கலங்கவெழி லேமிகுந்த
வுடற்குளுறு மூனெலா முண்டபின் னுச்சிட்ட
மெனவுமிழ நிலமீதிலே
யுன்மாம னிடுசாப மொன்றினுக் கஞ்சியுமை
பாகனுய ரடிபோற்றியு
மிடர்ப்பிணி யகன்றதிலை யின்றுநனி வளர்வதுந்
தேய்வதுந் தொழிலாகவே
யிருப்பதா லெந்தைகுக னுனையழைத் தானறிஞ
ரேத்துநற் தண்ணீர்மலை
யடற்கெழுந் திடுவேலை யேந்தவரு மலனுட
னம்புலீ யாடவாவே
யாறுமுக மானபர ஞானமணி மகிழவா
னம்புலீ யாடவாவே.

உன்னரவி தன்னைநல் லுலகெலா முலவிவரு
முதாசனனை யொளிகொள்வானி
னுடுவினங் களையருளு மொருபரன் மைந்தனிங்
கொருதர மழைத்தபோதே
பொன்னைநே ரமலனடி போற்ற வாராதபிழை
பொறுப்பதரி தாகுமையன்
புகல்வனே லு னதுபகை கொண்டபணி வந்துனைப்
பேருலகி லேவிழுங்கும்
மின்னையுமிழ் வேலேந்த வருமருட் சோதியாய்
மிளிர்வேத போதமுடிவாய்
மேதக்க புலவர்புகழ் தண்ணீர்மலைப் பதியில்
வித்தகன் தேவர்போற்று
மன்னைதிரி யம்பகி யளித்த வறு முககுருவோ
டம்புலீ யாடவாவே
யரியயற் கரிதாகு மாதிமுரு கேசனுட
னம்புலீ யாடவாவே.

குருமனைவி தன்னைமுன் கூடிமால் தனையீய்ந்த
கொடியனுன் செய்கைநோக்கிக்
கொங்குலவு கஞ்சமுன் வரவுகண் டாலுமுயர்
குளிர்முகை விரிப்பதில்லைத்
திருமருவு தக்கனின் மக்களிரு பானேழு
தெரிவையரை நீமணந்து
தேசுமிகு ரோகணியி னுடைமர்ந் தாயெனத்
திசைமுகன் மைந்தனேர்ந்து
வுகுமமென வேயிட்ட சாபந் தொலைத்திலா
யென்னவுல கேத்துமுதல்வ
னுனையழைத் தானரிய தண்ணீர்மலைப் பதி
புகந்துவாழ் கின்றவொருவ

னருமறைப் பொருளாய வறுமுகக் கடவுளுட
னம்புலீ யாடவாவே
யானந்த மேவுமலை வல்லிதரு மைந்தனுட
னம்புலீ யாடவாவே.

---

## சிற்றிற்பருவம்.

பங்கயன் மால்தின மேத்திடு மோர்பர
மேஸ்வர னருள்பாலா
பாவலர் நாவலர் போற்றிப் பணிந்திடும்
பதுமமலர்ப் பாதா
கொங்கவி ழுங்கடம்பா குகனேவளர்
கொற்றவ னேயரிய
குன்று தொளைத்திடு மற்புதனே சூரர்
குறையது தீர்க்கவரு
மெங்கள் குருமணியே யெனையாட்கொளு
மெந்தாய் மயிலாடு
மெழில்தரு தண்ணீர் மாமலை வாழ்ந்திடு
மிறைவா விறல்மேவுஞ்
செங்கையி ராறுடை யாய்செக மேவிய
சிற்றில் சிதைத்தருளே
செயமிகு துணைவர்க ளோடினி தாடிநற்
சிற்றில் சிதைத்தருளே.

முந்துதவத்துயர் முண்டகன் மால்பல
முனிவர்கள் யாவருமே
முறைமுறை யடிமலர் தொழுதிட முதிர்மறை
நான்கும் முழங்கிடவே

யிந்து முடித்தரு ளீசனு மிறைவியு
மிந்திரன் முதலாய
விமையவ ருந்தம திதயம் மகிழ்ந்திட
வீந்தநற் குமரேசா
நந்து முழுங்கொளிர் கங்கையில் வந்தமெய்
நாதா வளர்போதா
நாட்டமீ ராறுடையாய் நனி சேரறு
நங்கையர் புகழ்பாலா
சிந்து தண்ணீர்மலே மீதினில் வாழ்குகா
சிற்றில் சிதைத்தருளே
சித்த முவந்துறு துணைவர்க டம்மொடு
சிற்றில் சிதைத்தருளே.

பவவடி வாகிய படிறர்க ளுளமதிற்
படியா தொருவானிற்
பலமற்றிடு சுரர் நிலைபெற் றிடவரு
பதியே யறமோது
தவவடிவாகிய முனிவர்த மகமது
தங்கிய குருநாதா
தனியற் புதநட மிடுகுகனே திருத்
தண்ணீர்மலை வாசா
நவவடி வாகிய நாரண னும்நல
மேவுமுருத் திரனும்
நான்முகன் தூயமகேச னுடன் நனி
நாடுதற் கரியசதா
சிவவடி வாகிய சண்முக மாமணி
சிற்றில் சிதைத்தருளே
செல்வ மிகுந்திடு சரவண பவவுயர்
சிற்றில் சிதைத்தருளே.

நவவடிவமானவர், பிரமன், விஸ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவம். விந்து, நாதம், சத்தி, சிவம்.

இவர்களுட், பிரமன்முதல் நால்வரும் உருவமுள்ளவர்கள். விந்துமுதல் நான்கும் அருவமாயிருக்கப்பட்டது. சதாசிவம், ஒன்றே, அருவுருவமாக விளங்குவது.

கொங்கு திமிர்ந்த கதம்ப மணிந்தமெய்க்
குமரா விறல் மேவு
கோதறு பாவலர் நாவலர் போற்றிசெய்
குகனே யினிதாக
வெங்கு முறைந்திடு மெந்தை பராபர
னெழிலார் விழிமீதி
லெழிலிய மேழ்கடல் நீருமவித்திடு
மெரிவடி வாகிநனி
தங்கு திரைச்சர வணமெனும் வாவி
தவழ்ந்து விளையாடித்
தாரணி மேலொளிர் தண்ணீர்மலைதனிற்
தங்கிய முருகோனே
செங்கை யீராறுடையாய் திகழுந் திருச்
சிற்றில் சிதைத்தருளே
செகமது போற்றிட வேநட மாடிமெய்ச்
சிற்றில் சிதைத்தருளே.

வாரிக் கடலமு தோகைப் படுகெடு
வானவ ருண்டுநனி
வாழத் திருவுட னுழிப் படையுடை
வள்ளல் வழங்கவடு
காரிக தித்தெழ வோடிச் சுரரொடு
கண்ணுத லின்கழலே
கதியென் றழுபவர் மதிகண் டன்பொடு
கண்ட மமர்த்திமலை

நாரிக் கொருபுற மாகத் தருள்பர
ஞதற்கொரு குமரா
நாடற் கருமுருசா நவையற் றெளிர்
ஞாலத்துயர் தூய
சீரிக் கலர்தண் ணீர்மலை வாழ்குகா
சிற்றில் சிதைத்தருளே
செம்பொற் கழலணி செழுமலர்த் தாள்கொடு
சிற்றில் சிதைத்தருளே

குன்று தோறுடல்செய் குமரா வொருபர
குருவா யுறைபவனே
குறைவறு ஞான னிதான புராதன
கொற்றவை வேலவனே
நன்று நின்றேதவ நாகர்க ளேத்திடு
நாயக மாமணியே
நாட்ட மீரா றுடை யாய்நவை தீர்மலை
நங்கை தரும்மகனே
யென்று மிறைஞ்சிடு மன்பரை மனமகிழ்ந்
தெழிலுறக் காப்பவனே
யெந்தை குகா திருத் தண்ணீர் மாமலை
யிருந்திடு மற்புதனே
துன்று நிலத்தொளிர் தூயன வாகிய
சிற்றில் சிதைத்தருளே
தோமில் வளந்தரு தேசிகனே வளர்
சிற்றில் சிதைத்தருளே.

ஆர்கலி சுற்றிய நேமி யளந்திடு
மண்ணாலு மளிபாடு
மம்புய மீதுறை வானு மறிந்திட
வடிமுடி தேடிமுனங்

கார்கள் முழங்கிடு வானுங் கடுமலி
கட்செவி வாழ்பதியுங்

கதிமிகு மேனமு மெயினமு மாகிமுன்
கண்டறி யாதொளிரு

மேர்கரு ணாகர வெந்தை பரன்தரு
மெய்ம்பெரு மானுனையே

யேத்துமெய் யன்பர்க டிருவினை தீர்த்தினி
யெழுபிறப் பெய்தாநற்

சீர்கள்தருந் தண் ணீர்மலை நாயகா
சிற்றில் சிதைத்தருளே

செஞ்சிலம் போலிடு பாதா செக மதிற்
சிற்றில் சிதைத்தருளே

திங்க ளிளம்பிறை நேர்நுதல் மீதினிற்
றிதில்மணிச் சுடிகை

தேசுறு முடுவின மெனவொளிர் நித்திலந்
திகழ்தரு கண்டிகையும்

பங்கமில் பொற்சிலம் போலிட வேவளர்
பதுமமலர்ப் பதமும்

பசிய கடம்ப மணிந்திடு முச்சியிற்
பதிய வனத்துழாவி

கொங்கவிழ் மாமலர்க் கொக்கு மலிந்திடு
கோதில் தண்ணீர் மலைவாழ்

குமரா வடியவர் கூடிநின் றேத்துநற்
குகசர வணபவனே

செங்கை யீராறுடை யாய்செக மேபுகழ்
சிற்றில் சிதைத்தருளே

ஜெயஜெய வெனநட மாடிடு சண்முகா
சிற்றில் சிதைத்தருளே

வந்தனை செய்தடி போற்றிடு வானவர்
வளமதை நல்கவுயர்
வரைதனில் வருதிரி புரையு மையாளுடன்
வார்சடையான் விழியிற்
றந்த தயாநிதியே மறை போற்றி செய்
தத்துவ மாமணியே
தாதவிழ் நீபமலர்த் தொடையாய் திருத்
தண்ணீர் மாமலைவாழ்
கந்தா கலையுணர் வாண ரகத்தொளிர்
கற்பகமே யழகார்
கனகக் கழலிசை பாடிட வாடிடுங்
கமலமலர்ப்பாதஞ்
சிந்தனை செய்பவர் நெஞ்சுறை சாமிநற்
சிற்றில் சிதைத்தருளே
செல்வ மலிந்தசிற் தேசிகனே வளர்
சிற்றில் சிதைத்தருளே.

கந்த மதம்பொழி கரட தடக்கரி
'மாமுக னுக்கிளைய
கருணா கரகுக வரதா புவிபுகழ்
கற்பக வானவர்கள
பந்த மகற்றிட வருகுமரா வுயர்
பத்தர்கள் போற்றிடவே
படிமிசை நடமிடு முருகா வுனதடி
பாடிமெய் வீடுபெறு
மந்த மிகுங்கவி வாண ரகத்துறை
யையா வாறுமுகா
வரனுமை தருவர முருகா சரவண
மதில் வளர் குமரேசா

சிந்தக மார் தண்ணீர்மலை வாழ்குகா
சிற்றில் சிதைத்தருளே
செல்வா வருதிருத் துணைவர்க ளோடுநற்
சிற்றில் சிதைத்தருளே.

---

## சிறுதேர்ப்பருவம்.

பவளத் துயர் நாற் காலெழுப்பிப்
பணிமாமணியின் விட்டமிட்டுப்
பார்மேற் பச்சை யச்சமர்த்திப்
பசும்பொன் னுருளைதனைப்பூட்டி
திவள்சீர்ப் பதுமராக மதாற்
திறலாராணி யிறுக்கியொரு
தீதில்வைடூரியக் கொடுங்கை
சேர்த்தே வைரக்கூம்பமைத்து
தவளத்தொளிர் நற் தாரமதாற்
தனியோர் நாப்ப ணதுநிறுவித்
தலஞ்சூ ழாழித் தாளமதாற்
தகைசேர் தூயவடம் பூட்டி
கவளக் களிற்றுக் கிளையாய் செங்
கரத்தாற் சிறுதேருருட்டியருள்
கவினார் தண்ணீர் மலைப்பதிவாழ்
கந்தா சிறுதேருருட்டியருள்.

முகரந் துதைந்த முகைத்தோடு
மந்திகுடைந்துண் டிறுமாந்த
மறவாக் கரும்புள் ளுடன்நாளும்
மருவுங்குவளை மலர்ப்பாதா

தகரந் தனர்தம் வேள்விதனிற்
தழைத்தெழ் தலமுந் தான்நடுங்கத்
தருக்கால் வருமத் தின்னகத்தைத்
தனிவாம் பரியாய்க் கொண்டகுகா
பகரந்தமிலான் தந்த வெழிற்
பாலா வடியார் தினம்போற்றும்
பதியே யமரர் சிகாமணியே
படிமேலறிஞர் புகழுமருஞ்
சிகரந் திகழ்தண் ணீர்மலைவாழ்
செல்வா சிறுதேருருட்டியருள்
செயமேவிய சீராறு முகத்
தேவே சிறுதேருருட்டியருள்.

மண்ணும் மலையும் மலர்ச்சுனையும்
மதிதன் நிலவு மலிந்ததிரு
மணிமண் டபமும் மறையவன் முன்
மருவும் பதியும் மாட்சிமிகு
விண்ணும் விபுதர் வாழ்மனையும்
விறலார் குபேரன் றனதூரும்
விளையாட்டயரும் விமலாமெய்
விகிர்தா விமைய மலைக்கிறை முன்
பண்ணுந் தவத்தால் வந்தபரா
பரைதன் மகனே பதுமவலர்ப்
பாதா வன்பர் பணிந் தேத்தும்
பதியே தண்ணீர் மலைக்குகனே
கண்ணுண்மணியே கருதுதிருக்
கரத்தாற் சிறுதேருருட்டியருள்
கவிஞர் ஞானக் கலாநிதியினோர்
கந்தா சிறுதேருருட்டியருள்.

பண்ணிற் பொலிந்த பசுந்தமிழ்நூற்
பனுவலகத்துட் பகுத்தறிந்த
பகராவேழை யெனைப் படைத்த
பதியே யாறு முகத்தரசே
கண்ணிற்கொரு மாமணியே வான்
கமழ்தேன் துளிக்குங்கற்பகமே
கனகச் சிலம்பு கலந்திலங்குங்
காலா வடியேன் கடைத்தேற
மண்ணிற் பிறங்குங் குருவே நான்
மறைக்கோர் முதல்வா மதியாதார்
மனந்துட் பதியாத ருந்தவர் தம்
மனத்தே குடிகொண்டிருந் தொளியார்
விண்ணிற் றிகழ்தண் ணீர்மலைவாழ்
விமலா சிறுதேருருட்டியருள்
விதியோடமரர் போற்று மெந்தாய்
விறலார் சிறுதேருருட்டியருள்.

மருண்மா வடவை மகிழ்ந் துணைவர்
வருக்கைக் கனிகீண்டினிதளிக்க
மந்திதனக் கோர்கடுவ னுயர்
மாழைக் கனியீய்ந்திடு மரிய
விருண்மா ஞாலத்தவர்க்கரிதா
மிரவிநெடுவான் கதிர்ப்பரப்ப
விண்டை மகர மிறைத்து நனி
மிதமேவிரிக்குந் தண்ணிமலைப்
பொருளே மாசொன் றிலாத பரன்
புதல்வா புலவர் பெருமானே
பொய்யா ரடியேன் பிழை பொறுத்தாள்
போதக்குமரா பொய்தடிந்த

தெருண் மாதவர்கள் தினம் போற்றுஞ்
செல்வா சிறுதேருருட்டியருள்
தெய்வத் தருநேர் வந்த சுப்ர
மண்யா சிறுதேருருட்டியருள்.

கொங் குண்டறுகால் ஞிமிறு மெழிற்
குவளைப் பொகுட்டிற் குடியேறுங்
கோவுங் காவற் கடவுளுந் தங்
குறைதீர்த்' திடவே யோடிநனி
யங்குண் டிங்குண் டெனத் தேடி
யறியா வாதிப்பரனளித்த
வையா வாறு முகம் படைத்த
வமலா வறுமாமகளிர்குசம்
பொங்கு மரும் புத்த முகு முண்டு
புவிமேலாடும் புலவாமெய்ப்
போதா விமை யோர் போற்றவரும்
புனிதா தண்ணீர்மலை பிறங்கத்
தங்குங் குமரா தலம் போற்றுந்
தலைவா சிறுதேருருட்டியருள்
தவளத் தொளிர் வாயிதட் குகநற்
சாமிசிறு தேருருட்டியருள்,

நீத்தார் பெருமை நினைந் துலகில்
நிலையார் வீடுகொடுக்குமுயர்
நிமலா வமரர் தொழுந் தூய
நித்தா கனகக்கிரிபிறந்த
வாத்தாட் கரிய திருமகனே
யரசே யாறுமுகப்பொருளே
யப்பா வறிஞ ரகத்தில் வள
ரமுதே யாதிக்குருமணியே

யேத்தா துன்தா ளிருந் திடுமிவ்
வேழைக் கிரக்காயோஞானத்
தெளிலார் கண்ணீர் மலையி லென்று
மிருப்பாயடியேன் வினையகலக்
காத்தாள் பவனே நினது மலர்க்
கரத்தாற் சிறுதே ருருட்டியருள்
கலைநூற் புலவா சனக நிகர்
கரத்தாற் சிறுதேருருட்டியருள்.

அந்திச் சசிசெஞ் சடாட விக்கோ
ரழகாய்ச் சூடுமா திபர
னகிலத் துயிர்தந் திடுந் தூய
வமலையுமையா ளுடனளித்த
தந்திமுகற் கோர் துணை வாமெய்த்
தமிழ்நூற் புலவா தனிவேதத்
தலைவா வமரர் துயர் தீர்க்குந்
தருவே யனையவா றுமுகா
மந்திக் கரிய கனியளித்து மகிழ்ந்தோர்
கடுவன் மலர்க்கிளையில்
மருவு மருந் தண்ணீர் மலைவாழ்
மருந்தே யனையமுருகா வோர்
செந்திக் கினியாய் சரவணத்தெஞ்
செல்வா சிறுதேருருட்டியருள்
சீரார் மலர்மென் கரக் குகனே
செம்பொற் சிறுதேருருட்டியருள்.

கண்டுங் கனியுந் தீம்பாலுங்
கமழ்பூந் தேனுங் கலந்தீழக்
கலசத் திட்டதெனக் கவிஞர்
கலைமுத்தமிழைக் கலந்தெடுத்துப்

பண்டுன் பாதந்தனை யகத்தாற்
பணிந்தே யுருகியனு தினமும்
பாரிற் புலவர் சூட்டுமருட்
பாவுக் குகந்த குருமணியே
ஏண்டும் வராலும் ஞாதியர்போல்
ஞான்றுங் கலந்துவாழ வன்பால்
ஞானவடிவாய்த் திகழ் தண்ணீர்
மலைமேல் வாழும் நாயகனே
வண்டுண் கடம்ப மலர்த் தொடைகொள்
வரதா சிறுதேருருட்டியருள்
வானத்தவர்கள் போற்று மரும்
வள்ளால் சிறுதேருருட்டியருள்

செழுந்தே னூறுஞ் செய்ய மலர்ச்
செல்வன் றிருமாற்கரியசிவன்
சிமையத் திறைமுன் செய்த வத்தாற்
றிகழுந் தோகை மணிச்சிலம்பு
வழுந்தாட் கௌரி யுடனளித்த
வத்தா வாறுமுகத்தரசே
யமலா மறைகட் கரியகும
ரையாவடியார் தினம்போற்றித்
தொழுந் தாட்குகனே சூர்க்காகச்
சுடர்வேற் றுங்கவருமரிய
தூயா வடியேன் பெற்ற பெருந்
துணையே வானிற் றுதைந்துதின
மெழுஞ்சீர்த் தண்ணீர் மலையமர்ந்த
வெந்தாய் சிறுதேருருட்டியரு
ளெதிர் வேறில்லா திலங்கு மெழிற்
குகனே சிறுதேருருட்டியருள்.

அலைப்பட்ட வாழிவா யோதைவா னெழிலியுமி
ளசனியு மடங்கவரிய
வண்டம் வெடித்ததென வமரர்கள் நடுங்கவுய
ரகிலஞ் சுமந்தவரிதன்
நிலைபட்ட தெனமணிகொள் நெடுமுடி யசைக்கநிறை
மதியிரவி கதிமாறவும்
நித்தநிர் மலஞான வத்த சண்முகமோன
நீதகும ரேசகுருவே
கலைபட்ட மறைமுதற் கடவுளே கடுவுண்ட
கண்டனருள் ஞானமணியே
கார்த்திகேயா கமல நான்முகன் போற்றிடுங்
கருணைப்பிர வாகவரசே
சிலைபட்ட வீரர்புகழ் தண்ணீர் மலைக்குகா
சிறுபறை முழக்கியருளே
செஞ்சிலம் பசையநற் சிறடி பெயர்த்துமெய்ச்
சிறுபறை முழக்கியருளே.

முந்துமுத் தமிழறிஞர் முறைமுறை பணிந்தேத்து
முதல்வனென வந்தமுருகா
முண்டகத் தயர்வேத னுக்கரும் பொருளாய
மேதக்க தூயவமலா
நந்தமலி நீயமலர் மார்பனே ஞாலமிசை
நற்றவர்கள் நின்றுதொழுவோர்
நாடுபுகழ் தூய தண்ணீர்மலையில்வாழ் நாயகா
நாதநா தாந்த குகனே
பந்தமறு தேவர்தொழ நின்றசர வணபவா
பரிதிநிகா றுமுகனே
பார்த்தனை யளந்தமாற் கரியமருகா வடியர்
பதமலர்கள் போற்றிமகிழப்

சிந்துவும் ஞானமெய்த் தேசிகா செப்பருஞ்
சிறுபறை முழக்கியருளே
சித்தம துவந்துபொற் கோடுகொண் டேயினிய
சிறுபறைமுழக்கியருளே,

கும்பக களிற்றுமத வாரணக் கடகங்கள்
குமுறியெழு மோதையெனவுங்
குறைவிலா துயரசர சாமது குலாவிடுங்
கொற்றமார் நேமிதன்மேற்
பம்பிக் களித்தெழும் பேராழி யிதுவெனப்
பகரவெஞ்ஞான்று போதை
படாநற் கோடொன்று பொற்காத் தேர்ந்திமெய்ப்
பானுமதி கதிமாறவோர்
நம்பனருள் குமரகுருவே நாகர் போற்றிடும்
நாதநாதாந்த முடிவே
நளினமலர் மேலயன் நாரணன் புகழ்தூய
நாதனேபுயர் போதனே
செம்பவள வாயனே தண்ணீர் மலேக்குகா
சிறுபறை முழக்கியருளே
செஞ்சிலம் போலிடச் திருவடி பெயர்த்துநற்
சிறுபறை முழக்கியருளே.

பூதமுதல்வா தேசு மேவுயர் பிறங்கல்வரு
பொற்றொடிக் கினியகுமரா
புண்ணியா வமரர்புகழ் கண்ணியா வானந்த
மேவுநற் போதவமலா
நாதமுத லாய்நின்ற நாயகா நற்றவர்கள்
நாடிநின் றெத்து முருகா
நளினமலர் மீதிலுறை நான்முகக் கடவுள்முன்
நவையற வளித்தவுலகில்

வேதமுதல் வீா தூய தண்ணீர் மலைப்பதி
விளங்கு குமரேச குருவே
விரிதிரைக் கடலிலரி துயில்செயும் நாரணன்
விரும்புசீர் மருகனேநற்
சிதமுத மனையநின் திருவடி யெனக்கீந்து
சிறுபறை முழக்கியருளே
செகமெலாம் போற்றுசிவ சண்முகா கருதரிய
சிறுபறை முழக்கியருளே.

அண்டங்க ளத்தனையும் வாழுநற் சரவசர
மானவுயிர் யாவுமடமுன்
ஞர்ப்மரித் தெழுமாழி யோதையையு மகன்விசும்
பமர்ந்துயிர் துடைக்குமேழு
கொண்டலுமி ழசனியென வமரர்முதல் யாவருங்
குடர்நடுங் கிடவுளத்தாற்
கோதிலா நான்மறைகள் போற்றவரு குமாகுரு
கோடுபொற் கரமேந்தியோர்
மண்டல மெலாந்துதித் திடநின்ற வரதனே
மாதவர்கள் போற்ற மகிழ்வாய்
மதிமுதற் கோள்கள்நிலை மாறாநன் நீர்மலையில்
வாழமல ஞானமணியே
சண்டனுயர் கொன்றமெய்ப் பானுதவு சண்முகா
சிறுபறை முழக்கியருளே
சற்சனர்க ளேத்துசிற் சரவண பவாவெழிற்
சிறுபறை முழக்கியருளே.

நஞ்சூட்டு வாளெயிறு நக்கும் பணிப்பாயல்
நாடொறுந் துஞ்சுமமல
நாரண னரக்கர்குல நாயகன் றனையட்டு
நவையற வறைந்தமுரசும்

மஞ்சூட்டு மசனியும் மறிகடற் குரவையும்
மன்னுபல கரியோதையும்
மறையவான் முகட்டிர மதிமுதற் கோள்களும்
மருவுபதி விட்டகலவும்
நெஞ்சூட்டு மார்வமொடு நேயமிகு மமரர்கள்
நினைந்தூட்டு மமுதமிதென
நிலைபெற்ற குமுதவிதழ் நின்றொழுகு தேறல்நெடு
நிலமது நனைக்கவழகார்
செஞ்சூட்டு வாரணந் திகழுநீர் மலையிலுயர்
சிறுபறை முழக்கியருளே
சித்தமகிழ் வாகநற் சண்முகா நினதரிய
சிறுபறை முழக்கியருளே.

காரினிற் பொலியசனி போலுமெழில் மேவிடுங்
கமலநிகர் கழல்களதனிற்
கனகச் சிலம்புகள் கறங்க வானவர்கடங்
கமழமிர்த மோடுகனிதேன்
பாரினிற் பொலிபபோற் பவளவித ழிலமுது
பசியபட் டாடைநனைய
பண்டயன் மால்தேவர் கண்டுகொள் ளாததோர்
பரமனருள் ஞானமுதல்வா
தாரினிற் றிகழ்கடம் பாவரிய தனவனிகர்
தஞ்சமென் றினிதுபோற்றுந்
தத்துவா தீதமுரு கேசனே யன்பர்புகழ்
சாமியறு முகநாதனே
சீரினிற் பெரிதாய தண்ணீர்மலைக்குகா
சிறுபறை முழக்கியருளே
செகமெலாம் பரவுநற் சரவண பவாதூய
சிறுபறை முழக்கியருளே.

அந்திவான் திகழுமதியனைய திருமலரடியி
லமபொற் சிலம்பலம்ப
வணிகெழுமு தாரகையை மானுநன் னித்திலத்
தாரரிய மார்பு திகழப்
பந்தியார் வச்சிரக் குழைகளுயர் பரிதிபோற்
படருரருஞ் செவிகளசையப்
பகருநல் லமுதுகனிதே னூறுமிதழ்களிற்
படர்ந்துடல் நனைப்பவரிய
தந்திகள் பிறங்குநற் தண்ணீர்மலைச்சாமி
சண்முகா வமரர்போற்றுந்
தாருவென வகிலமதில் மேவுமடியார் கடந்
துயர்தவிர்த்தாளுமமலா
செந்திநாதா சிவன் தந்தகுமரேசகுரு
சிறுபறை முழக்கியருளே.
செகமெலாம் பரவுநற் சரவணபவானாய
சிறுபறை முழக்கியருளே.

இட்டமோ டிருவிசும் பதனில் வானவர்கள்தின
மேத்துமிறை யாகியகிலத்
தினியநல் லாடல்புரி யறுமுகா வெந்தைபர
மேசரருள் ஞானமுதல்வா
மட்டவிழ் மலர்க்கடம் பாவரிய மாதவர்கள்
மனத்தில் வளர்நேயமுருகா
மதியிரவி சுற்றுமலை வல்லிதரு மைந்தனே
மறைமுதல்வ னுனகுகனே
கிட்டமா றறநெறி பிடித்தொழுகு தனவணிகர்
தேடிநின் றேத்தஞான்றுந்
நீதில்தண் ணீர்மலையின் மீதுதிற லோடுநனி
திகழுமெய்க் குமரகுருவே

சிட்டர்கள் தமக்கருள வந்தமெய்த் தேவனே
சிறுபறை முழக்கியருளே
செஞ்சிலம் போலிடத் திருவடி பெயர்த்தரிய
சிறுபறை முழக்கியருளே.

பின்னலந் திரைதவழு பாற்கடலி லரிதுயில்செய்
புனிதநா ரணனுமரிய
பிரமனுந் தேடவறி யாதமெய்ப் பரமனருள்
பெட்புமிகுமறு முகேசா
கன்னலொடு கதலிமலி தண்ணீர் மலைப்பதி
கலந்துவாழ் கருணைகரா
கடிகமழு மோர்கதம் பந்தொடை யணிந்திலகு
கந்தனே கனகவானே
யின்னல் தீர்த்திடவந்த விறைவனே முருகுதவ
ழிளநகைத் துவர்கொள் புனிதா
வின்னிசை முளங்குபொற் சிலம்பணிந் திடுகுகா
வெந்தை முருகேச மணியே
சென்னியா றுடைய மெய்ச் செல்வமே நினதரிய
சிறுபறை முழக்கியருளே
செழுமலர்ப் போதனைய கரங்கள் கொண்டே தூய
சிறுபறை முழக்கியருளே.

முற்றிற்று.

---